க்களும் அதோகதியடைவர். ஊர்த்துவ புண்டரந்தரித்தவரைப் பார்க்கநேரிடுமாயின் கண்களை மூடிக்கொள்வேன். எனது நேத்ரம் எவன் பொருட்டு மூடுகின்றதோ அவனுக்கு ஞானமுதியாதன்றோ? கைலாய சிகரத்திலுள்ள கைலாசேஸ்வரமெனும் லிங்கத்தைத் தேவனாயினும் மனிதனாயினும் ஏனைய ஜந்துவாயினும் ஒருக்ஷணகாலம் நினைப்பின் அவனுக்குடனே சாந்நித்யம் தருவேன். இதன்மஹிமையை யாவருமறியார். இது லிங்கராஜமெனப்பெயரியது. எனக்கு அபாரமாகிய ஆனந்தத்தையளிப்பதும் போகமோக்ஷந்தருவதும் பிரமவிஷ்ணு ருத்ரர்களுக்கு லோகவியாபாரத்தை நடத்துவதற்குத் தக்கயோக்யதையைத் தருவதும் இந்தலிங்கமே. ஓதேவி! ஈனொருவனுக்கு மிதனைக்கூறியதில்லை. இந்தலிங்கத்திலேயே கற்பர்தோறும் ஸகலசராசரமு மொடுங்குகின்றது. ஆகலின் இந்த லிலிங்கமே ஸகலாதாரமாம். பிரளயகாலத்தில் யான் நீ ஸ்கந்தன்ஹேரம்பன் முதலியவர்களோடு கூட எனதுருவத்தை யொடுக்கிக்கொண்டு இந்த லிலிங்கத்தில் வசிக்கின்றேன். ஸகலஜகங்களின்தோற்றநிலையொடுக்கத் தொழிலானது எனது லீலையே. காரணங்களுக்குக் காரணனும் பதிகளுக்குப் பதியும் சேதனர்களுக்குச் சேதனனும் காரணங்களுக்கு அதிபாதிபனும் காலவரைக்குளடங்கிய ஸகலங்களையு முண்டாக்குகின்றவனும் தனக்குக் காரணமற்றவனும் ஸகல பூதங்களிலும் வசிப்பவனும் யானே. ஓதேவி! இது மஹாரகஸ்யமாயுள்ளதாயினும் உனக்கு விளக்கிக் கூறினேன். தேவர் முனிவர் முதலியவர்களுக் குரைத்தேனில்லை. இது மிக்க ரகஸ்யமாதலின் மனதிலேயே வைத்துக்கொள்ளவேண்டும். சிவரஹஸ்யமெனும் ஸமுத்திரத்தில் பிரதமாம் சமெனும் ரத்னமானது உனக்களிக்கப்பட்டது. இதனைக்காதணியாக வைத்துக்கொள்வாயாக. சத்யம். இது சத்தியம் என்று கைதூக்கிக் கூறுகின்றேனென்றருளினர்.

இவ்வாறு இறைவன் தேவியை இறுகத்தழுவிக் கூறிமகிழ்ந்து கைலையில் வீற்றிருந்தனர். ஸ்கந்தர். ஓமுனிவரே! கைலாஸத்தில் அபாரமஹிமை பெற்றுள்ளன வாகியலிங்காலயங்களின் சம்பந்தமாகிய சரிதமானது கேட்டவர்களது பாபங்களாகிய பஞ்சமலைக்குத்தீயாகும். அபாரமாகிய புண்யங்களையுந்தரும். சிரவணஞ்செய்கின்றவர்களுக்கு இதனிலும் ஹிதமாகியசரிதம் வேறொன்றில்லை. இதனைக் கேட்டமாத்திரத்தில் சிவபாதாரவிந்தத்தில் மனம் லயமடையப் பெறுவான். மீண்டும் சம்சாரமாகிய முதலையின் வாயிலகப்படான். ஜைகீஷவ்யரே! உமது நிமித்தமாய் மஹேஸ்வரனருளப் பட்ட